உ

திருச்செந்தூர்

# சுப்பிரமணியசுவாமிபேரில்

# மாலையந்தாதி

இஃது

திருநெல்வேலி ஜில்லா

செல்லையம்பலம்மாசித்துக்குடிமுனிசீப்

## மா-௱-௱ தனுக்கோடி முதலியா

ரவர்களால்இயற்றியது

திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது ௲அ௱சுஎ௵ ஜூன்மீ 1867

உ

சிவமயம

இஃது

# சாத்துக்கவிகள்.

பேரையூர்சமஸ்தானவித்வான்
இலிங்கையரவர்களியற்றியது

ஓலையந்தாதி யென்றுடுமயூர முகைக்குமது *
வேலையந்தாதிரு க்கைவேலையா வென்று வேண்டிநித *
மாலையந்தாதிவர் சோலையுஞ்சூழ்செந்திலாதிபன்மேன் *
மாலையந்தாதி சொன்னான் றனுக்கோடிமகாமன்னனே *

இஃது

# திருநெல்வேலி

யிலிருக்கும்

வித்வான்

# அழகியசொக்கநாதபிள்ளை

இயற்றியது

தனுக்கோடிமாலுண்ட வையந்தொடாமலுந்தண் கடமடா
தனுக்கோடிமாலுடல கண்ணுயிரங்கொளத்தான்செய்மனம
தனுக்கோடிமாலுறலையாமலுங்குகன்றருள்பெறவுந
தனுக்கோடிமாலுரைசெய்தானிம்மாலையந்தாதியையே

எமரனநதாதி யருசாயுதன் சேய்மருகேசவென்றுத்
தமரனநதாதிரு வாழ்க்கையுந்தாவென த்தநதிடலகண்
டமரனந்தாதின் கமலத்தனை சசமனைத்தவிர்ப்பான
குமரனந்தாதி த்தமிழ்பாடினன்றனுக்கோடிமன்னே

உ

குமரன்துணை.

# மாலையந்தாதி

விநாயகர்காப்பு

வெண்பா

செந்தாமரையடிமேசோசெந்தூர்சசெவ்வேண்மாலை
யந்தாதிதன்னையறையவே கந்தாதி
மாலையணிவேழமுகமறபுயல்றன்பொற்பதமெக
காலையினுமாலையி லுங்காப்

கலித்துறை

சீர்நிறைந்தோங்குதிருசெந்திலாவுன்றிருவடிமே
லோர்கவிமாலையந்தாதி சொன்னேனின்னுறுப்பெனுமப
பார்மகனேனேகதிரகங்களிஷடபலன்கொடுக்க
வாரணிவோன்சுதனேநல்குவாய்நின்னருளெனக்கே (க)

அருளபுரிவாருனையலலாதுவேறெனக்காபுவியின் *
மருளனுகாதுவரமருளவாயமணமேமிகுத்த *
சுருளகொடுததநதமயிலாகும்வள்ளியைத்தோயுமறைப *
பொருளுனையன்றியுண்டோசெந்திலாவன்பர்போற்றுநாகே ௨)

பேற்றுவநன்னடிபோறறுமவவானநதமபோலுலகிற *
சாறறுவதற்கொருநாலுளதோவுடலசாந்தவினை *
மாறறுவதற்கென்சிரமீதிலுன்றன்மலரடியை *
யேற்றுமபடிக்குவரநதாசெநதாரிலிருப்பவனே ௩

இருப்பவனீமுனனிருந்தவனீயிதையெண்ணில்வெள்ளிப *
பொருப்பதில்வாழும்பொருளீயெனவுன்னிப்போற்றிலென்ன *
விருப்பதுபோலவிமமண்மிசைவாழநதத்தின்மேலினமோர் *
கருப்பபதியாதருள்வாயோதிருசசெந்திற்காரணனே (௪)

காரணனேசநகாதிபர்தேடியுங்காண்பரிய
பூரணனேயெனக்கேயிரங்காயம்புவியையுண்ட
நாரணனான்முகனருசிட்சகூளைநமனுக்கிட்டே
யாரணமார்த்திடச்செந்தினில்வந்தவென்றாண்டவனே ௫

ஆண்டவனேநின்னடிமையுநானெனவாகியும்ப
பாண்டவர்போலவும்வாடினன்றேபண்டுகுஞ்சரித்தாய
வேண்டமகிழ்ந்ததிருச்செந்திலாயவெவ்வினைகளறக
கீண்டடியேனையும்வாழ்விக்கவேண்டுங்கிருபைசெய்யே ௬

செய்வாய்கொடியமனமாயையறுத்தினமுமுனைக
கைவாய்புதைத்துப்பணிந்திடவேகடம்பாசெந்திலாய
மைவார்குழன்மடமாதாபித்தற்றுமயக்கமறப்
பெய்வாயுனதருளென்மீதிலேயன்பர்பேசுதற்கே ௭

# மாலையந்தாதி

பேசுவருன்புகழ்நின்னடியாரிளமபெண்கணமருண் ❊
டேசுவதைப்புருடார்த்தமென்பேனிரப் போககிரங்கிக் ❊
காசுதுக்காணியுமீயாதிருந்தகயவனென்றன் ❊
மாசுதொலைந்திடமாசெந்திலாயநலவரமருளே அ

வரந்தாவகிலம்புரந்தாயுனதுமலரடியென் ❊
சிரந்தாவுன்மேறகவிசெபபவுந்தாசிந்தையேகலஙகா ❊
வரந்தாபுவியுற்றசெல்வமுந்தாவுலகேழளந்த ❊
பரந்தாமன்வேண்டுந்திருசசெந்தில்வாழ்குகபடணணவனே கூ

பண்ணவனேநின்னடிபணியாவென்பவமொழிய ❊
வெண்ணுவையோகதியேதுமுண்டோவெளியேனகத்தி ❊
னண்ணுவையோபுவியெல்லாமதிக்குநலமளித்தென ❊
புண்ணுடைநெஞ்சினையாற்றுவையோசெந்திற்புண்ணியனே ௰

புண்ணியபாவங்களென் றுதகன்மப்புலையர்கடங்
கண்ணினிலியான்விழிக்காதருள்வாய் கஞசன்மாலபரவத
திண்ணியசூருடல் கீண்டாயடிமைஜெனனமற
நுண்ணிடைவளளிமகிழுசெந்திலாயன்புநோக்குவையே (ம்க)

நோககமரிவையாமேலாகி க்காமத்தினொந்துபுண்ணு
யேக்கமுறறேனுக்கிரங்குவையோ வெளியேனுக்கென்று
மாக்கமுதவுநின்றுறெழுதகோர்ந்தந்தகனுக்கஞசா
ஆக்கமெனக்கருளசெய்வாயதிருசசெந்திலுத்தமனே (ம்உ)

உத்தமனேயுனக்கொப்புயாவாயொருதெய்வமுண்டோ
சுத்தமனத்துடையாரகம்வாழுஞசுகவடிவே
சித்தமுனதடி த்யானத்துள்ளாக்குஞசெயலுதவுங்
கத்தனுநீயல்லவோ செந்திலாயென்றன் கண்மணியே (ம்௩)

## மாலையந்தாதி

கண்ணிற்சிறந்தகருமணியென்றுன்கழல்பணிவோர்
விண்ணிற்சிறந்தமணியாயெக்காலும் விளங்குவரால
பெண்ணிற்சிறநதபெருமாட்டிவள்ளியின்பெட்புகநதாய
மண்ணிற்பிறந்திறவாவரந்தாசெநதில்வாழ்கந்தனே (௰௪)

கந்தாவுனதுதிருவடிதன்னை க்கருத்தில்வைத்தே
யெந்தாயிரங்கிடுவாயெனப்போற்றி யிறைஞ்சினாககு
நந்தாதசெல்வமுகந்தளித்தாயுனை நம்புமென்முன
வந்தாதரவுடனாண்டுகொள்வாய்செந்திலவாழ்குகனே (௰௫)

குகனேசடானனனேயையனே யெனக்கொருசியரன்
மகனேயெனுமுனம்வந்துநின்றாய் தொன்மறைகளறு
முகனேசகத்துக்குக்காரணனென்று மொழிந்திடுஞ்சிற்
சுகனேதிருச்செந்திலாயிநின் சூக்ஷத்தைசசொல்லெனக்கே (௰௬)

எனக்கேபிறையவனீயறிவேறிலை பேதமிலா ❊
வுனக்கேயடிமைகள்வேண்டுமென்னையொறுத்தருள் ❊
கனகசேசபாரககரும்பாகியவளளிகாதலனே ❊
மனக்கேதநீக்கிடுவாய்செந்திலவாழுமறைக்கொழுந்தே (யஎ)

கொழுந்தேயுரட்கனிக்கரம்பேயெனவன்பாருருகுந்த ❊
செழுந்தேனைப்பாலைத்தெவிட்டாதவானந்தத்தெள்ளமுதைத் ❊
தொழுந்தோறுமின்பமபுதிதாக்குவானைபிததொலலுலகி ❊
லழுந்தாதுகாக்குநல்செந்தூரனெனபர்களன்பர்களே (யஅ)

பேபெருகிமனமேயுருகியழுதழுது ❊
என்பேநெக்காகவுருகிடுவோகளிதயமதிற ❊
றுன்பேதுநலவிர் யேதுகொல்லோ சுகவாரியிலா ❊
ழின்பேகொடுத்திடுவாய்செந்தில்வாழுமிருநிதியே (யகூ)

நிதியேபடைத்தவராலுநின்னடிநேயம்வைத்துன் ※
றுதியேசெயாதிருநதோாகணின்னன்பர்முன்றேன்றுவோன் ※
மதியேயிலாவொன்றிகழுடைவாரிந்தமண்ணிலென்றன் ※
விதியேதெனவறியேன்கைவிடேல்செந்திலவேலவனே (உ0)

வேலுடையாய்வள்ளிமாலுடையாயன்பர்வேண்டு தண்டைக் ※
காலுடையாயென்கருத்துடையாயண்டங்காததிடுஞ்செங ※
கோலுடையாயெனைக்கொண்டுடையாயபுகழ்கூறுமறை ※
நாலுடையாயஙகமாறுடையாய்செந்திலையகமே (உக)

நாயகியம்மைபிராமிகுண்டலிநான்மறைககு ※
தாயகிபோலுற்றவன்மயிடாசுரன்றன்னைசசெற்றன் ※
பாயகிலாண்டமுமீன்றளேயந்தப்பணசசியென்று ※
வாயகம்பேசுவோசெந்திலாயருள்வாக்கெனக்கே (உஉ)

வாக்குமனமுமொன்றாயலயமாயுன்மலரடியை ✻
நோக்குந்திறலதுவேநிட்டையாங்கற்பமோரொடிய ✻
தாக்குமுனதடியாரக்கடியேனைத்தறைக்கணிதச் ✻
சேக்கையிலாரல்வழியிலென்செயுஞ்செந்திற்சின்மயனே (௨௩)

சின்மயனேபிரபஞ்சகந்தனிலுள்ளவெசசென்மங்களு ✻
நின்மயமேயன்றிவேறில்லையென்னுநிலைபுணர்ந்து ✻
நன்மயமானசடாக்ஷரநிஷ்டையைநாடிலவா ✻
தன்மயமாவனொன்றேசெந்திலாய்மறைசாற்றிடுமே (௨௪)

சாற்றிடுநல்வழிதானுணரேனுனைசசற்றுமுன்னேன் ✻
போற்றிடுவான்மலருன்னடிமேலிட்டுபூசிக்கிலே ✻
னூற்றிடுமபுளியாய்க்கணீந்தேன்றுயரியாவுமுக்ர ✻
காற்றிடும்பஞ்செனவாக்கிடுவாய்செந்திற்கற்பகமே (௨௫)

கற்பகக்காவுற்றவிண்ணவர்கோன்பெற்றகண்மணியை
யற்புதமாய்ச்சேந்திலாதிபநீமணந்தானபின்னர்
வெம்புற்றும்வேடர்குலமாதைசசேர்ந்தவிபரமென்னே
தற்பரனேயிதையேதுசொல்லானசசதுமுகனே உசு

முகமேநிறைமதிமாமலரொன்றந்தமோய்குழலா
ரகமேகளிக்கப்புகழ்ந்தபின்னன்னவராற்றிடைக்குரு
சுகமேநிலையென்றிருந்தேனந்தோவதத்துயர்தொலைப்பா
யுகமேமுடியினுநந்தாதசெந்திலுருமணியே (உஎ)

மணியேமணிவிளக்கேசெந்திலாயெனவாழ்த்தியுன்றன
பணியேபெரிதெனபபத்திசெய்வோரைப்பரவியினிப்
பிணியேதுமற்றுன்னருணட்டபுற்றும்பெருமைதரா
வணியேயணிக்கணியேமயிலேறுமரும்பொருளே (உஅ)

## மாலை யந்தாதி

அரும்பொருளேயெனதாருயிரேநின்னடியிணையே
பெரும்பவநீந்தும்புணையெனவெண்ணிலன்பேருலகந
தரும்பலனன்மையதாய்க்கொடுப்பாயினிததாயவயிற்றில்
வரும்படிநீவைத்திடேல்செந்தில்வாழுமறைமுதலே ௨௯

மறையவர்போற்றிடசசெந்தினில்வந்தவெண்வாழமுதலே
யிறையவனேயென்றுனைத்துதித்தேனெளியேனுககிநதத்
தறையவர்கண்டிடவொன்றைவெல்லுந்தகைமைபுநன்
னிறைபுகழ்செல்வமருள்வாயசசீருநிலைநிற்கவே ௩௰

செந்திலாதிபன்மேல்மாலையந்தாதிமுற்றிறறு.

குமரன்துணை